# தோற்றம்

"தமிழால் இணைவோம்" என்ற குழு திருமதி ஆனந்தி ஜீவா அவர்களால் முகநூலில் 11.11.2020ல் தொடங்கப்பட்டது. இந்த குழுவின் இணைநிர்வாகி என்ற பொறுப்பை திருகௌரிசங்கர் அவர்கள் ஏற்றுக்கொண்டார். அங்கத்தினர்களின் தமிழ் எழுத்து வல்லமையை உருவாக்குவதே இதன் நோக்கம். இந்த நோக்கத்தை

முன்னிறுத்தி அங்கத்தினர்களின் எழுத்து ஆற்றலை வலுவாக்குவது என்ற வகையில் இந்த விதிகள் கொண்டு வரப்பட்டன.

01. பதிவுகள் தமிழில் இருக்க வேண்டும்

02. சொந்த பதிவுகளாக இருக்க வேண்டும்.

03. வேற்று தளங்களில் உள்ள பதிவுகளை பகிர்வு செய்யக்கூடாது.

04. பதிவுகள் எப்படி வேண்டும் என்றாலும் இருக்கலாம் -

சிறுகதைகள், குறுங்கதைகள், நகைச்சுவை துணுக்குகள், கவிதைகள், தகவல்கள், கட்டுரைகள்போன்றவை.

05. அரசியல் மற்றும் சினிமா சம்பந்தமான பதிவுகளுக்கு அனுமதியில்லை.

06. படைப்புகள் தமிழில் தான் இருக்க வேண்டும் என்பது தான் ஒரு இறுக்கமான விதி.

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் கொண்டாடும் இந்த குழுவில் அங்கத்தினர்கள் தங்கள்

படைப்புக்களைப் பதிவிடலாம், விவாதிக்கலாம், கருத்துக்களைப் பகிரலாம். படைப்பாளிகளையும் விமர்சகர்களையும் ஊக்குவிக்கும் இந்த குழு எந்த ஒரு இயக்கத்தையும் சாராத தமிழ் குழு. கதைகளைச் சொல்லும் கதைச்சொல்லி, பாடகர்கள், ஆடல்கலைஞர்கள், ஓவியர்கள், எழுத்தாளர்கள், விமர்சகர்கள் போன்றவர்களுக்கு உகந்த தளம்.

---::      :::---

# எழுத்துப் பட்டறை

*பட்டறை* என்றால் சீர்திருத்துவது. எழுத்துப்பட்டறை என்ற தலைப்பில் பல விதமான போட்டிகளை புகுத்தி, அங்கத்தினர்கள் எழுத்து ஆற்றலை வெளிக்கொண்டு வரலாம் என்று முடிவு செய்யப்பட்டது.

அந்தவகையில் இந்த போட்டிகள் அறிமுகம் செய்யப்பட்டன.

01. சிறுகதைபோட்டி- 01 (600 வார்த்தைகளுக்கு மிகாமல்) -

கண்டிப்பாக அறிவிக்கப்பட்ட ஒருவாக்கியம் கதையில் இடம் பெற வேண்டும்.

02. சிறுகதைபோட்டி -02 (600 வார்த்தைகளுக்கு மிகாமல்) - கண்டிப்பாக அறிவிக்கப்பட்ட நான்கு வார்த்தைகள் கதையில் இடம் பெற வேண்டும்.

03. குறுங்கதைபோட்டி -03 (20 வார்த்தைகளுக்கு மிகாமல்) - ஒற்றை வரியில் இருக்க வேண்டும்.

04. குறுங்கதை போட்டி -04 (20 வாcத்தைகளுக்கு மிகாமல்) - ஒற்றை வரியில் இருக்க வேண்டும். எடக்கு மடக்காக இருக்க வேண்டும்.

அங்கத்தினர்களை ஊக்குவிக்கும் வகையில் போட்டிகளில் அறிமுகம் ஆன சிறந்த பதிவுகளை கோர்த்து ஒரு சிறிய மின் புத்தக அளவில் வெளியிடலாம் என்று முடிவு செய்யப்பட்டது.

வெற்றிகரமாக முதல் இதழ் புத்தாண்டு மலராக வெளியிடப்பட்டது. முதல்

நான்கு போட்டிகளில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பதிவுகள் அந்த இதழை அலங்கரித்தன.

முதல் நான்கு போட்டிகளில் பதிவாகி விடுபட்ட சிறந்த பதிவுகளும், அடுத்த இரண்டு போட்டிகளில் பதிவாகி தேர்வான பதிவுகளும் இந்த இரண்டாவது இதழில் வெளியாகின்றன. இளம் கவிஞர்களின் அற்புதமான பதிவுகள் இந்த இதழை பெரும்பாலும் அலங்கரிக்கின்றன.

**--::: :::---**

# சிறுகதைபோட்டி 02

# விதிகள்

சிறுகதைகள் எழுதும் எழுத்தாளர்களே - உங்கள் பேனாவிற்கு (இப்போது keyboard மற்றும் mouse )ஒரு வேலை வந்திருக்கிறது.

***கோடாலி; ஆலமரம்; படகு; மாடு-*** இந்த நான்கு வார்த்தைகளையும் உங்கள் சிறுகதையில் எங்கு வேண்டுமானாலும் பயன்படுத்தலாம். ஆரம்பத்தில் அல்லது நடுவில்

அல்லது கடைசியில். . எழுதுங்கள் ஒரு குறுங்கதையை .600 வார்த்தைகளுக்கு மிகாமல்.

**(போட்டிஅறிமுகம் - அ .கௌரிசங்கர்)**



# சிறந்தபதிவுகள்

# 01

# பூங்காவனம்

## நந்தினிஸ்ரீதரன்

ஒரு மாலை நேரத்தில் ஒரு ஆலமர த்தடியில் கிரம மக்கள் அனைவரும் கூடி இருக்க, ஒரு பக்கம் ஊர் பெரிய வர்கள் மறு பக்கம் மரியன் குடும்பத்தினர் (அதாவது இந்த ஊரில் இருந்த முத்து பேச்சியின்

வம்சாவழியைச்சேர்த்தவர்கள் ). ஒரே சலசலப்புக்கு மத்தியில் ஊர் தலைவர் வருகிறார் .அனைவரும் அமைதி அடைந்து வணக்கத்தைச் சொல்லி அவரை வரவேற்கின்றனர் .தலைவருடன் இருந்தவர் இன்றைக்கு நீங்கதான் ஒரு முடிவை சொல்லனும் சொல்லிவிட்டு ,மரியனை பார்க்கிறார்.

யார் இந்தமரியன் ?

மரியன் குடும்பத்தினர் அமெரிக்காவில் ஏற்பட்ட ஆட்சி

மாற்றம் காரணமாக வேறு வழியில்லாமல் தன் முப்பாட்டனுக்கு சொந்தமான பூங்காவனத்தில் இருக்கும் விவசாய நிலத்தை நம்பி அந்நிலத்தை ரிசார்ட்டாக மாத்தி புதிய தொழிலை ஆரம்பிக்க பூங்காவனம் வந்தவர்கள் .

இப்பொழுது தற்போது நடக்கும் பஞ்சாயத்துக்கு வருவோம் .

மரியன் தன் வாதத்தை ஆரம்பிக்கிறான் .தன் மூதாதையர்

வெறும் வாய் சொல்லலாக எங்கள் நிலத்தை இந்த ஊரில் உள்ள அவருக்கு நெருக்கமாக இருந்தவர்களுக்கு கொடுத்தது உண்மை தான் .அதற்காகஅ வர்களிடமே இருப்பது நியாயம் ஆகாது .அது தன் பரம்பரை சொத்து ,சட்டப்படி தனக்கு தான் உரிமையுள்ளது . அதை என்ன வேண்டுமானலும் செய்ய தனக்கு முழு அதிகாரமுள்ளது, அதனால் அந்த இடத்தை அவர்களிடம் இருந்து

தனக்கு அளிக்க வேண்டும் என்பது மரியனின் வாதம் .

அந்த நிலத்தை அனுபவிப்பவர்கள் வாதத்தை தொடர்ந்தனர் .அதாவது முத்துப்பேச்சி ஆத்தா அமெரிக்க சென்ற மகன் திரும்பி வராத காரணத்தால் அந்நிலத்தை தான் இறப்பதற்கு முன்னாள் எங்களை பாத்துக்க சொன்னது உண்மை தான் .நிலத்தை திருப்பி கொடுக்க எங்களுக்கு மறுப்பில்லை .ஆன அந்த

நிலத்துல இயற்கை விவசாயம் செஞ்சு இவ்வளவு காலம் நிலத்த பாதுகாத்து செழிப்பாவைச்சுக்கிட்டு இருக்கோம் .அத அழிச்சிட்டு ஏதோ சொகுசு ஹோட்டல் ஆரம்பிக்கறது தங்களுக்கு விருப்பமில்லை என்றனர் .அவர்கள் யோசனை என்னவென்றால் மரியனுக்கு நிலத்தை கொடுக்கிறோம் .அவருக்கு விவசாயம் தெரியாதது சொன்னதால, அந்நிலத்தை தாங்களே பார்த்துக்கொண்டு வரும் லாபத்தில் கால்வாசி அவர்களும் மீதி

முக்கால்வாசி மரியனுக்கு கொடுப்பதாக கூறினார்கள் .

பஞ்சாயத்து தலைவர் யோசித்து விட்டு ஒரு சிறப்பான முடிவை எடுக்கிறார் அது என்னவென்றால் மரியன் குடும்பம் ஒரு மாத காலம் இந்த ஊர் மக்கள் எப்படி வாழ்கிறார்களோ அவர்களும் அதே பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வாழ வேண்டும் .முடிவை ஒரு மாதத்திற்கு பிறகு அறிவிப்பதாக

கூறினார். .மேலும் அவர்களுக்கு வேண்டிய அனைத்தையும் அந்த ஊர்மக்கள் செய்து தருவார்கள் என்று கூறினார்.

மரியனும் ஒரு மாதம்தானே எப்படியும் தன் நிலத்தை யாரும் சட்டப்படி எதுவும் செய்ய முடியாது என்ற நம்பிக்கையில் சரி என்றான் .

மீண்டும் இருபதே நாளில் பஞ்சாயத்தை கூட்டினான் மரியன் .ஊர்மக்கள் குழப்பத்துடன் மரியன்னை

பார்க்கின்றனர் .மரியன் தொடர்கிறான் ,நாங்கள் இதுவரையில் இப்படி ஒரு வாழ்க்கை வாழ்ந்தது இல்லை .இந்த பூங்காவனம் ஒரு சொர்க்கம் போல் தனக்கு தெரிவதாக கூறினான் . இந்த சுயசார்பு வாழ்க்கை அதாவது சுத்தமான பசுக்களின் பால் ,கோடரியைஎ டுத்து விறகு வெட்டி விறகு சேகரிப்பது , சுத்தமான நஞ்சு இல்லாத உணவு சுத்தமான காற்று தூய்மையான தண்ணீர் , படகில் சென்று மீன் பிடித்து சமைத்து

உண்பது பறவைகளின் சத்தம் , கோழி மாடுகளின் மேல் மனிதன் வைத்திருக்கும் அன்பு . இவை அனைத்திருக்கும் மேலாக இம்மக்களின் அன்பு தனக்கும் தன் குடும்பத்திற்கும் மரியாதை ,தன்னம்பிகை ,தைரியம், முக்கியமாக தன் பிள்ளைகளுக்கு அனுபவ வாழ்க்கை முறையை கற்று தந்தது . இதில் ரிசார்ட் கட்டி இதன் இயற்கை அழகையும் இம்மக்களையும் கஷ்டப்படுத்த விரும்பவில்லை .ஏன்

இந்த பூங்காவனமே ஒரு அழகிய இயற்கை ரிசார்ட் தான் .பணம் ,சொகுசு வாழ்கை என்று ஓடிய நான் ஒரு சிறிய வீடு , நல்ல நண்பர்கள் , சாப்பிட நல்ல உணவு .இதுதான் வாழ்க்கை என்று புரிந்துக்கொன்டேன் . இப்பொழுது தங்கள் முன் நிற்பது மரியன் இல்லை .வாழ்க்கையின் அர்த்தத்தை உணர்த்த கருப்பன் மகனான மாரியப்பன் .

மாற்றம் ஒன்றே மாறாதது தான் .ஆனால் இங்கு மாறியதோ பூங்காவனம் இல்லை மரியனின் மனம்.



# சிறுகதைபோட்டி 04

## விதிகள்

இந்த போட்டியின் விதிகள் இவை:

01. ஒரு ஆச்சரியம் தரும் வாக்கியம் எழுத வேண்டும்.

02. மொத்தம் இருபது வார்த்தைகளுக்குள் இருக்க வேண்டும்.

03. தகவல்/கதை/செய்தி ஒற்றை வரியில் இருக்க வேண்டும்.

04. எதிர்மறை தகவல் இடம் பெற வேண்டும்.

உதாரணத்திற்கு எனது பங்களிப்பு:

01. "உங்களுக்கு ஒரு பாசிட்டிவ் தகவலை சொல்லுகிறேன்" என்று விவேக்கை புன்முறுவலோடு பார்த்த டாக்டர், "உங்கள் கோவிட் பரிசோதனை முடிவு நெகடிவ்" என்று ஆச்சரியப்படுத்தினார்.

02. "இதற்கு ஒத்து போகிற மாதிரியான ஒரு சானிடிசேர் கொடுங்கள்" என்று நடிகை நந்தினி கொடுத்த பாட்டிலை வாங்கிப்பார்த்த கடைக்காரர் அதிர்ச்சியடைந்தார் "அந்த பாட்டில் ஒரு பாடி ஸ்பிரேயர்" என்று தெரிந்தவுடன். "

**(போட்டிஅறிமுகம் - அ .கௌரிசங்கர்)**



# சிறந்தபதிவுகள்

# 01

## சிவசங்கரி கோமதிநாயகம்

"பசிக்குதும்மா", என்று கேட்டப்பிள்ளைக்குக் கஞ்சி வைக்கக்காசில்லாமல் தவித்தாள் ஒரு தாய்! பீட்சாவை வாங்கி வைத்து விட்டு "சாப்பிடுடா", என்று கெஞ்சிய தாயிடம் "பசிக்கலைம்மா", என்று சொன்னான் மகன்!

# சிறுகதைபோட்டி 05

## விதிகள்

சிறு கதைகள் எழுதும் எழுத்தாளர்களே - உங்கள் பேனாவிற்கு (இப்போது keyboard மற்றும் mouse )ஒரு வேலை வந்திருக்கிறது. இது ஒரு குறுங்கதை போட்டி.பறவைகள், மிருகங்கள், பொருட்கள் - போன்றவற்றை முன்னிறுத்தி 600 வார்த்தைகளுக்கு மிகாமல் எழுத வேண்டும். அதாவது அந்த பறவை, மிருகம் அல்லது

பொருள் தான் கதையின் முக்கிய கதாபாத்திரம்.

**(போட்டிஅறிமுகம் - ஆனந்தி ஜீவா)**

# --::சிறந்தபதிவுகள் ::-

**01**

# வான் நோக்கிய சிந்தனை

## ஆ. முருகேசுவரி

மலையின் முகட்டில் அமர்ந்து கொண்டு நீலவானை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள் கயல்விழி.

கயல் ...கயல்... என்று அழைத்தபடியே வந்தான் ஆனந்த்.

கயல் முகட்டில் இருப்பதை கண்ட

ஆனந்த் கயல் நீ இங்க இருக்கியா..?

எங்கெல்லாம் உன்னத் தேடுறது

என்றான்.

அப்பொழுதும் செவிமடுக்காதவளாய்

நீலவானை நோட்டமிட்டபடி இருந்தாள்,

கயல்.

அருகில் வந்த அவன்… தோளைத்தட்டி

கயல் நான் கூப்பிட்டது கேட்கலையா..?

அப்படி என்ன வானத்துல இருக்கு.

இவ்வளவு நேரமா வச்சகண்

வாங்காமல் பார்த்துக்கொண்டே

இருக்க, என்றான்.

எதையும் கண்டுகொள்ளாதவளாய்,

கயல், ஆனந்த் அங்க பாரே என்றாள்.

"அங்க என்ன இருக்கு", வெறும்

வானத்துல அப்படி என்னத்த தான்

ரசிக்கிறியோ..?

என்ன நண்பா, உனக்கு கண்ணு

தெரியாம போயிடுச்சா..!

"ஓய் என்ன ரொம்பத்தான்", அங்க என்ன

தெரியுது வெறும் வானத்தை

பார்த்துட்டு உனக்கு தான் எதோ

ஆய்போச்சு..

எனக்கா, உன் கண்ணுக்கு தான் ஏதோ

ஆயிடுச்சு..

சரி, அதவிடு, அங்க பாரு அந்த கழுக பாரே...

என்னது கழுகா..?

ஆமப்பா, அங்க பாரே அந்த ரெண்டு கழுகையும்..

அடச்சீ... இவ்வளவு நேரம் உட்கார்ந்து இந்த கழுகத்தான் பாத்துட்டு இருந்தியா. அங்க எல்லாரும் உனைக் காணனு தேடிட்டு இருக்காங்க.

என்னப்பா, அடச்சீன்ற... உனக்கு கழுகப்பத்தி என்ன தெரியும்.

ஆமா..., இந்தம்மா கழுகப்பத்தி ஆராய்ச்சி பண்ணி முனைவர் பட்டம் வாங்கிட்டாங்க..

விளையாடாத..., அங்க பாரு இங்க இருக்க அந்த ஒரு கழுகு கீழே இருந்த ஒரு குச்சிய எடுத்துட்டு ரொம்ப உயரமா போயி மேல இருந்து கீழே தூக்கிப்போடுது இன்னொரு கழுகு அதை தரையிலே விழுகுறதுக்கு முன்னாடியே எடுத்துட்டுப் போயி அந்தக் கழுகிட்ட கொடுக்குது. ஒரு தடவை இல்லை நிறைய தடவை செஞ்சுட்டு இருக்கு.

'அதுக்கும் வேலை இல்ல உனக்கு வேலை இல்லை'.. சரி.. வா போலாம்.

உன்கிட்ட போய் சொல்றேன் பாரு.. ஞானசூனியம், அங்க பாரு முதல என்றாள் கயல் அதட்டியபடியே .

அவளின் விருப்பத்தை மதித்தவனாய் அவனும் பார்க்கத் தொடங்கினான்.

கயல் முகத்தில் ஒருவித பெருமித உணர்வு மகிழ்ச்சியாய் அதை விளக்கிக் கூற ஆரம்பித்தாள்.

இதோ பாரு ஆனந்த், அந்த கழுகு அந்த குச்சியை எடுத்துட்டு வருது பாரு எவ்வளவு தூரம் போகுது பாரே அதுவும் ஒரு தடவைதான் சிறகடிச்சுருக்கு எப்படி விமானம் போல மேலே ஏறுது பாரு..

வேறு வழி இல்லாமல் ஆனந்தும் கேட்க துவங்கினான். அங்க பாரு.. அங்க பாரு.. எவ்வளவு உயரத்துக்கு போயிடுச்சு.. அங்க இருந்து அந்த குச்சியை போடும்

பாரே.. என்று கயல் சொல்லி முடிப்பதற்குள் அந்த கழுகு குச்சியைக் கீழே போட்டது.

இப்ப பாரு ஆனந்த் அந்த ஆண்கழுக அது கீழ விழாமல் பிடிக்க எவ்வளவு வேகமா போகுது பாரு...

அவள் முகத்தில் அத்தனை ஒரு மகிழ்ச்சி.. அதை பார்த்த ஆனந்திற்கு ஒரே வியப்பு.

அவன் இப்போ எது கேட்டாலும் அவள் செவிகளில் விழுகாது. அந்த அளவிற்கு, அந்தக் கழுகுகளின் சுயம்வரத்தை ரசித்தபடி நின்றாள்.

அவள் குழந்தை போல கதை கூறிக் கொண்டே இருந்தாள். இப்ப பாரு இந்த கழுக அது போய் தரையில் விழுவதற்கு முன்னாடியே அத புடிச்சிட்டு வந்துரும் பாரே.. ஓரிரு நொடிகளில் இருவருமே அந்த கழுதை உற்று நோக்கினார்.

கயல் கூறியவரே அந்தக் கழுகும் அந்த குச்சியை தரையில் விழுமுன் பிடித்துக்கொண்டு மேலே ஏறி பெண்கழுகிடம் நீட்டியது.

அப்போது ஆனந்த் கேட்டான், "அது இரண்டும் விளையாடிக் கொண்டிருக்கிறது அதில் என்ன இத்தனை மகிழ்ச்சி உனக்கு".

அதில் அந்த குச்சியைக் கீழே போட்டது பெண்கழுகு, அதனை கீழே விழாமல் மேலே எடுத்துச் சென்றது ஆண் கழுகு என்றாள் கயல்.

பறவைகளில் கூட ஆண்களுக்கு பாடு பெரும்பாடு தானோ என்றான் ஆனந்த்..., மனிதப்பிறவி தான் பாவம் அப்படின்னு பார்த்தா இந்த கழுகும் அப்படித்தான் இருக்கானு தொடர்ந்தான் அவன் பேச்சை.. சரி, இதெல்லாம் எப்படி தெரியும் உனக்கு என்றான் ஆனந்த்.

இப்போதான் சமீபத்துல கழுகு பற்றி ஒரு கட்டுரையில் படித்தேன். எவ்வளவு அருமையான விடயங்கள் அதுல இருந்துச்சு தெரியுமா..

எனக்கு கழுகுனா எங்க வீட்ல இருக்க கோழி குஞ்ச தூக்கிட்டு போனதுதான் தெரியும்.

அதை எவ்வளவு எளிதாக சொல்லிட்ட.. எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் தன்னுடைய இரைய அப்படி ஒரு கூர்மையாக பார்க்குமாம். இந்த கழுகுக்கு அவ்வளவு பார்வைத்திறன். இந்த கழுகோட கண்ணுல கிட்டத்தட்ட ஒரு லட்சத்துக்கு மேலே ஒளி உணரும் சக்தி இருக்காம் என்றாள், கயல்.

அப்படியே மேல இருந்து ஒரு விமானம் தரையிறங்க மாதிரி வந்து தன்னோட வலிமை படைத்த பெரிய நகங்களை வச்சு அதனுடைய இரையஅப்படியே

கவ்விச் செல்லுமா.. என்றபடியே மகிழ்ச்சி சற்றும் குறையாதவளாய் பேசினாள், கயல். அதுமட்டுமில்ல ஆனந்த் கழுகு சும்மா கிடைக்கிறதெல்லாம் தின்றதில்ல. அது முயற்சியில் புதுசாதான் சாப்பிடும் நம்மள மாதிரி குளிர்சாதனப் பெட்டில வக்கிறது, மீந்து போனது, அடுத்தவ உழைப்ப சொறன்றது அதெல்லாம் கெடையாது..

அது மட்டுமில்ல அது ரெண்டு முட்டைதான் போடுமா.. நாமிருவர் நமக்கிருவர் மாதிரி.

நெறைய தெரிஞ்சு வச்சுருக்க போல.. சரி.. அது கெடக்கட்டும் திடீர்னு

உனக்கென்ன கழுகு மேல் இவ்வள பாசம்.

அதோட… 'ஆளுமைத்திறன்' எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு.

அவள் பேசி முடிப்பதற்கு முன் முந்திரிக்கொட்டை போல் அப்போ வர்ற தேர்தல்ல வேட்பாளரா நிக்க வைச்சுரலாம் என்றான் ஆனந்த்.

அச்சோ... பயங்கர நகைச்சுவை. ஆனால் எனக்கு தான் சிரிப்பு வரல சொல்றத முழுசா கேளு முதல்ல என்றாள் கயல். பிறகு, அந்த கட்டுரையை படித்ததிலிருந்து அதோட அந்தத் தனித்துவம், அது தான் நேசிக்கும் தன் இணைக்காக இறங்கி வரும் அந்தப்

பாங்கு அதை வார்த்தைகளால் அளக்க முடியுமா என்று எனக்குத் தெரியவில்லை, என்றாள் கயல்.

அவன் என்ன கிண்டல் செய்தாலும், அவள் எதர்க்கும் சலித்தவளாய் இல்லாமல் கழுகின் நேசத்தில் பிணைந்தவளாய் நின்றாள். இன்னும் அவனுக்கு விளக்கமாக கூற நினைத்தவள் பாகுபலி பாகம்- 2 பார்த்து இருக்கிறாயா என்று கேட்டாள்.

அவன் கிண்டலாக அதில் கழுகு நடித்தது மாதிரி எனக்குத் தெரியலையே என்றான் சிரித்துக்கொண்டே..

இவளோ சிந்தனை சிறிதும் சிதறாதவளாக ஒழுங்காக கேள் என்று அவனை அதட்டிய படியே அவள் மனதில் தோன்றியதை கூற ஆரம்பித்தாள்.

அவளை இடைமறித்து, இரு.. இரு.. ஓ...அந்த கட்சியா.. என்றான் சிரித்துக்கொண்டே.. "ஆண்களின் தோளில் நடந்து செல்வதில் அவ்வளவு மகிழ்ச்சியா உனக்கு..." என்றவன் ‘படம் பார்த்ததிலிருந்து எத்தனை தடவ சொல்லிட்ட.. நீ..’ என்றான்.

உன் பார்வைக்கு அவ்வளவு தான் தெரிகிறது. அதன் உணர்வு உனக்குப் புரியவில்லை என்று நான்

நினைக்கிறேன் என்றபடியே, தன்னை விரும்புகிறவளின் எண்ணம் உணர்ந்த அந்த ஒரு புன்னகை அதற்கு ஈடு இணையே கிடையாது. அந்த உணர்வு, தேவசேனையோட நேர்கொண்ட நடை அதெல்லாம் உனக்குப் புரியாது. அதே உணர்வை நான் இந்த கழுகிடம் கண்டேன்.

ஆமாம்மா... எனக்கு எதுவும் புரியாது உனக்கு தான் எல்லாம் புரியும். சரி, வாமா சிந்தனை சிற்பியே.. எல்லாரும் உனக்காக காத்துட்டு இருக்காங்க. நீ கழுகை ரசித்ததெல்லாம் போதும் அது ரெண்டு சேர்ந்து பறந்து போயிடுச்சு... நீ வாம்மா நம்ம போலாம்.

சரி என்றவள், இடம் பெயர்ந்தால்

அங்கிருந்து...ஆனால் அவள்

கண்களிலும் மனதிலும் அந்த கழுகு

இடம்பெயரவில்லை.. அதன்

நினைவுகளை அசைபோட்டுக் கொண்டு

அப்படியே அவள் எழுந்து சென்றாள்,

'பெண்மையின் பெருமிதம்

தலைதூக்கியவாறு'.. மனதுக்குள்,

'இயற்கையில் நமக்கு எவ்வளவு

படிப்பினை இருக்கிறது.. இதெல்லாம்

விட்டுட்டு ஏன் நாமெலாம்

ஒருத்தருக்கொருத்தர் தேவையில்லாத

எண்ணங்களுக்குள் சுழன்று

கிடக்கிறோம்' என்று நினைத்த படியே

பெருமூச்சு விட்டாள்.

**02**

# நம்பிக்கையின்ஆழம்

## செல்வபிரகாஷ்

நம்பிக்கையின் ஆழம் என்ற தலைப்பில், நீளத் தும்பிக்கையை, தரை உரசியபடியே நின்றிருக்கும் யானையின் அடியில் தூங்கிக்கொண்டிருந்த மருதையனின் புகைப்படம் பிரபல தினசரியில் வெளியாகியிருந்தது.

அதைப்பற்றி வருவோர் போவோரிடம் சிலாகித்து சொல்லிக்கொண்டிருந்தார்.

குறிஞ்சி டீக்கடை மாணிக்கம். அவர் பாட்ஷாவோடு இணைந்த மாணிக்கம் மாதிரி ஆகிவிடக் கூடிய காரணம் இல்லாமல் இல்லை. அந்த புகைப்படத்தின் பின்புலத்தில் இவரின் கடை நன்றாகவும், இவர் டீயாத்தி நிற்பது மங்கலாகவும் இருந்தது.

மருதையன் நான்கு தூண்களுக்கு அடியில் இருக்கும் எறும்பு போல சுறுசுறுப்பாக தூங்கிக்கொண்டிருந்தான். அண்ணே ஒரு பார்சலும் இரண்டு பெரிய வருக்கியும், என்ற குரல் கேட்ட கணத்தில் யாரு வள்ளியா, புள்ள? இங்க பாரு உங்கப்பன் போட்டா பேப்பர்ல வந்திருக்கு என காட்டவும். வெடுக்கென

பிடுங்கிக்கொண்டு அப்பனை நோக்கி ஓடினாள். மருதயைனுக்கு அதைக் காட்டி மகிழ்ந்து கொண்டிருக்க, அவன் அதை வாங்கி யானைக்கு காட்டினான்.

அது விட்ட மூச்சில் பேப்பர் பறந்து விரிந்தது. என்னைய விட உன்னைய பெருசாத்தான் படம் புடிச்சிருக்கான்.

அப்பரமென்ன தட்டி விட்டு ரோசம் காட்டுற என சொல்லிவிட்டு, டீ எங்கே எனக் கேட்க திரும்ப ஓடினாள்.

படம் திரும்ப வந்த மகிழ்ச்சியில் புதுத் தேத்தூள் மாற்றி சர்க்கரை சேர்த்தி

ஒரு பார்சல் அடித்தார் மாணிக்கம். பின் படத்தை கத்தரித்து காலண்டர் க்கு பக்கத்தில் ஒட்டி வைத்தார்.

மனம் மகிழ்ச்சியில் இருக்கும் போது புத்தி நல்ல செயல்களை மேற்கொள்ளும் என்பதை ஒரு பார்சலில் மருதையனும்,

வள்ளியும் பருகிக் கொண்டிருந்தனர். தான் பாகனான நாளை அசை போட்டது மனம். நாராயணங் கோவில், உப பாகனாக இருந்து சம்பளப் பிரச்சனையால் வெளியேற்றப்பட்ட நேரம்.

வேறு வேலைக்கு முடிவு செய்து அலைந்தபடி இருந்தான்.

தேடல் மூன்று மாதத்தை நெருங்கிய படி இருந்த ஒரு நாளில், பல கூச்சல் களுக்கு இடையே சிறு பாறை என

நகர்ந்து வந்து கொண்டிருந்தது குட்டி யானை.

யாரோ பெரிய மனிதர் அழகர் கோவிலுக்கு காணிக்கையாக வழங்கி உள்ளதாக பேசியபடி பின்னால் ஓடி வந்தனர் நிர்வாகிகள்.

அதேசமயம் உள்ளூர் காரனான மருதயனைப் பார்த்ததால், அதை கோவிலுக்கு கொண்டு வர உதவி கேட்டனர். மருதையன் பின்னாலேயே ஓடி ஆற்றில் நின்றுகொண்டிருந்த சிறு பாறையின் மனதில் தேரையாக, உள்நுழைந்து வசப்படுத்தினான். அன்றிலிருந்து இன்று குன்றாக வளர்ந்து நிற்கும் முப்பது வருடங்களாக

அவன் அதை விட்டு வெளியேறவில்லை. அவனுக்கு பிறந்த பெண் குழந்தைக்கு யானையின் பெயரான வள்ளி என்பதையே வைத்தான். வள்ளிக்கு பிடித்த வயலூர் வெல்லக் கட்டியை தன் செலவில் வாங்கிக் கொடுப்பான். சிறு சிறு உடல்நலக்குறைவு ஏற்படுகையில், மருத்துவ மூலிகைகளை உணவுக் கவளத்தோடு வீணாகாமல் கொடுக்க பெரும்பாடு படுவான். வள்ளி குணமாகும்வரை ஊன் உறக்கமின்றி தவித்துப் போவான். அவர்கள் தந்தை மகளாகவே அழகர் கோவிலடியில் பழகி வந்தனர். நலவாழ்வு முகாம் என

அழைத்து லாரியில் ஏற்றப்பட்ட பிரயத்தணக் காட்சிகள், நாளேடுகளில் வந்து விவாதத்தை ஏற்படுத்தின.

ஒருவழியாக முகாமுக்கு கொண்டு சென்று, அங்கே விளையாண்டு, சத்துணவு உண்டு, சிகிச்சை பெற்று திரும்பியபோது உற்சாகமாக இருந்தது வள்ளி. அதன் பிறகு இரண்டுமுகாமுக்கு சென்று திரும்பிய நாட்களில்.

சரிவர உணவு எடுக்கவில்லை, பலமுறை முரண்டு பிடித்தது. மருதையனின் பாசத்திற்காக ஓரளவு கட்டுப்பட்டு இருந்தது. அதுபோன்ற ஒரு

சிகிச்சை நாளில், மருத்துவர் வள்ளியின் காடு ஏக்கம் பற்றி கூறினார். சில நாட்களில் இயல்புக்கு திரும்பியது. சில சமயம் காரணமற்று கண்ணீர் உகுப்பதை மருதையன் கவனித்தான்.

அந்த ஆண்டின் முகாம் அறிவிப்பு வந்தவுடன் வள்ளியை விட பதட்டத்தில் இருந்தான் மருதையன். சரியான உறக்கம் இல்லை, உணவு இல்லை. வழக்கத்திற்கு மாறாக தன் குடும்பத்துடன் அதிகமிருந்தான்.

தான் சேமித்த பணம் மற்றும் சம்பள முன்பணம், எல்லாவற்றையும் திரட்டி, தன் மனைவி மகளிடம் ஒப்படைத்த போது. அவர்கள் கேட்டதற்கு எல்லாம்

கிடைக்கறப்ப பயன்படுத்திக்கனும். என சமாளித்து, வள்ளியுடன் லாரி ஏறினான். ஊரைக் கடக்கையில் ஊர் பலகையை கவலையோடு பார்த்தான்.

திருப்பும் சாத்தியத்தை எவ்வளவு முயன்றும் மனம் கொள்ளவில்லை.

முது மலைக்கு வந்து இரண்டு நாட்கள் ஆகிவிட்டது. வள்ளி உற்சாகமாக இருந்தாள். மூன்றாம் நாள் ஆற்றில் குளிப்பாட்டியபடி, முன்னோக்கி நடத்திக்கொண்டிருந்தான். சக பாகங்களைவிட சற்று நேரம் கழித்து புறப்பட்டு இருந்ததால். யாரும் கவனிப்பாரற்ற நேரம் பார்த்து மறுகரை ஏறினார்கள், வள்ளியும் மருதையனும்.

அது முகாம் எல்லைக்கு வெளியே இருந்த அடர்வனம். அதனுள் நாளொன்றுக்கு அறுபது மைல் நடக்கும் திறனுடைய வள்ளியை, நூற்றிபத்து மைல் நடத்தி வந்திருந்தான். இந்தப் பெரு வனத்தில் வள்ளியை அதன் குடும்பத்தோடு சேர்த்துவிடும் கனவில், பசி மறந்தான்

இரண்டு நாட்கள் தொடர்ந்த களைப்பில், அண்டை மாநில வனப்பகுதி வந்திருந்தது. அன்று முகாம் தப்பிய யானையும் பாகனும் சென்ற செய்தியும் வந்திருந்தது. ஒரு இடத்தில் ஓடிய சிற்றோடையில் வள்ளியை குளிப்பாட்டி தானும் குளித்து

திரும்புகையில். இரு செந்நாய்கள் மருதையனை வேட்டையாட களமிறங்கின. சுதாரித்த படி வள்ளி வள்ளி, என கத்தியபடியே ஓடினான். ஆளுக்கு ஒரு திசை பிரிந்தனர். செந்நாய்கள் இருபக்கமும் நெருங்கிய கணத்தில். தன் கனவு முடிந்ததென விக்கித்து நிற்கையில். ஒரு துதிக்கை அவனைச் சுழற்றி தன் முதுகில் அமர்த்தியது. வேட்டை பறிபோன விரக்தி, உமிழ்நீராய் சிந்திக் கொண்டிருந்தது. கிடைத்த பழங்களை உண்டு இரண்டு நாட்களாக முன் சென்றான். இதுவரை நான்கு யானைக் கூட்டங்களை பார்த்தும். எந்த

கூட்டமும் தன் சொந்தம் என்று வள்ளியை ஏற்கவில்லை. இதற்கிடையில் ஒரு கொம்பனுடன் போராட வேண்டியிருந்தது. பல துயர நட்சத்திரங்களை மறைத்தபடி ஏழாம் நாள் விடிந்தது. அந்த விடியல் சிறுத்தை என்ற அவஸ்தையாகத் தொடங்கியது. அன்னாளின் மதியத்தில் பதினாறு யானைகள் ஒரு குடும்பமாக வலசை வந்து கொண்டிருந்தன. இவன் அசந்து உறங்கிக் கொண்டிருந்தான். சற்று தள்ளி வள்ளி புதிய தாவரங்களை சுவைத்தபடி மெய்மறந்து நின்று இருந்தது. விழித்தபோது எதிரே யானைக்கூட்டம் நின்று இருந்தது.

வள்ளியைதேடியபோது அதைக் காணவில்லை, இவன் பதறி நின்றபோது, பதினாறு துதிக்கைகள் கோபுரமாக உயர்ந்தது. அதன் கீழ் வள்ளி நின்றிருந்தது. பெருமகிழ்ச்சி அடைந்தான், இருந்தாலும் முன்னகர பயந்தான். வள்ளி தும்பிக்கையை நீட்டி அழைக்க இவன் சென்றான். அப்போது பதினேழு துதிக்கைகள் கோபுரமாக உயர்ந்தது.

அதன்கீழ் கரிகாலனைப் போல நின்றிருந்தான் மருதையன்.

பிறகு அன்று இரவு வள்ளியின் கூட்டம் ஒரு நெடுஞ்சாலைக்கு பக்கம் வந்ததும்.

இவன் தனித்து விலகினான். அங்கு வந்த லாரியை நிறுத்தி ஏறி வீடு திரும்பினான்.

அங்கே வள்ளி பத்திரிக்கையை பிடித்தபடி, அழுது கொண்டிருந்தாள்.

முகாம் தப்பிய வள்ளியின் படத்தைப் பார்த்தபடி இருந்த அவனின் விழிநீர், அப்படத்தின் தும்பிக்கையை வருடிக்கொண்டிருந்தது.



# தமிழ் கவிதைகள் போட்டி 06

## விதிகள்

01. கவிதைகள் தமிழில் இருக்கவேண்டும்

02. இருபது வரிகளுக்கு மிகாமல் இருக்க வேண்டும்

03. இலக்கண பிழைகள் இல்லாமல் இருக்க வேண்டும்

04. கவிதைகள் எப்படி வேண்டும் என்றாலும் இருக்கலாம். புது கவிதைகளும் அனுப்பலாம்

05. ஒருவர் எத்தனை கவிதைகள் வேண்டும் என்றாலும் அனுப்பலாம்

06. மிகச்சிறந்த படைப்புகள் ஐந்து நட்சத்திர குறியீட்டால் தெரிவிக்கப்படும். அவை பொங்கல் மலரில் இடம் பெறும்

07. கவிஞர்கள் தங்கள் கவித்திறமையை காட்டுவதற்கு ஒரு அறிய சந்தர்ப்பம்

08. பதிவுகள் பதிவு செய்ய கடைசி தேதி - 01.12.2020

09. போட்டியின் முதல் பத்தியில் இந்த வார்த்தைகளை மறக்காமல் எழுதவும் - #எழுத்துப்பட்டறை - தமிழ் கவிதை போட்டி

**(போட்டி அறிமுகம் - அ .கௌரிசங்கர்)**



# --::சிறந்தபதிவுகள் ::-

## 01

## எத்தனை வண்ணங்கள்

### கலந்தர்சேக்

எத்தனை வண்ணங்கள்

எத்தனை மதிப்புகள்

கருங்கல் கால் மிதி படும்

நவரத்தின கல்லோ கண்ணால்

தொட்டு வணங்கப்படும்

இருக்கும் இடம் பொறுத்தே

இத்தனை மாறுதல்கள்

மனித மனமும்

இப்படிதான்

ஆணவம் அகங்காரம்

கருங்கல்லால்

கால்மிதிபடும்

அன்பு கருணை

நவரத்தின கல்லாய்

நன்று மதிக்கப்படும்.

-



02

# இலை

## பா.காயத்ரி

இளந்தளிராக பிறந்து

இலையாக வளர்ந்து

பசுமையின் நிறமாக

அடையாளம் கொண்டாயே...!

கிளையோடு நீக்கொண்ட

சினத்தால் உதிர்ந்து

தனிந்தே தளிராகி

மரத்தின் ஆடையானாயோ...!

பூக்களால் புன்னகைத்து

முகத்தை அதில்மறைத்து

மணத்தோடு மகிழ்ந்தாடி

மனத்தைக் கவர்ந்தாயே...!

அசைந்து வளிதந்து

முகிலைக் குளிரூட்டி

அமிழ்தால் நிலமகளை

கருவுறச் செய்தாயே...!

இலையாகி உயிர்வளியானாய்

சருகாகி உரமானாய்

விதையுனுள் புதையுண்டு

தளிராக எழுந்தாயே...!



03

# வண்ணத்துப்பூச்சி

## பா.காயத்ரி

இயற்கை ஈன்ற

இறைவனின் தேவதையாய்

மலரின் பண்பொத்த

மகிழ்ச்சியாய் திகழ்பவளே...!

நிறத்தால் பெயர்பெற்ற

நிகரில்லாத் தூரிகையாய்

துருதுருவென பறக்கும்

துன்பமிழைக்காச் சாதுவே...!

மகரந்தச் சேர்க்கைக்கு

மகத்தானக் காரணியாய்

நன்னிலம் செழிக்கவே

நற்றுணையாக நின்றவளே...!

புழுவாய் பிறப்பெடுத்து

புன்னகைத்து சிறகடித்த

உன்முயற்சி சொல்லும்

உன்னதப் படிப்பினையொன்றை...!

நந்தவன இராணியான

நல்வினை வண்ணத்துப்பூச்சியே

உன்பொறுமை சொல்லும்

உகந்தப் பாடமொன்றை...!



# 04

# வார்த்தைகள்

## பா.காயத்ரி

எழுந்து நின்ற

எண்ணத் துகள்களின்

எழுத்து கோர்வையின்

வடிவமே வார்த்தை…!

அன்பின் மொழியால்

அமிழ்தெனக் கனிந்தே

அகத்தின் தூய்மையால்

வார்த்தையைப் பகிந்தளி…!

நல்லதொரு வார்த்தையை

நன்னெறியால் உதிர்த்துவிட்டு

நல்கும் இதழ்களில்

புன்னகையை பரவவிடு...!

வார்த்தையின் வலிமை

வாழ்க்கையை அமைத்திட

வாழ்நிலை உயர்வன

வார்த்தையை உதிர்த்திடு...!

கடிந்த வார்த்தைகள்

கனலாய் தகித்திடும்

கடிந்தவர் புகழை

வாசலில் வீசிடும்...!

மலரின் மென்மையாய்

மணத்தின் மேன்மையாய்

மாசற்ற வார்த்தைகளால்

உலகினை வென்றெடு...!



# 05

# என்உள்எடுத்தவளே

## ஆ. முருகேசுவரி

தே தாய் தந்தை தந்தான்

நீ நான் தன்னை எடுத்து

ஏ விழி ஏற்றி அழைத்து

கை வளை தழுவ நிறைத்து

நீ உள் தொட்ட நொடியில்

நா அடி பிறழ நெஞ்சமோ

தீ அது பற்றி எரிக்க

போ என மனம் உரைக்க

பா ஏடு வந்து நிறைக்க

மை விழி வாசம் மறைக்க

தூ தடை தந்து கரைக்க

சீ என நாணம் உரைக்க

கா வில் ஓடியே ஒளிந்த

நீ ஈயா மனம் என்னவோ

மீ அலை முகில் தவப்ப

போ என தடம் மாற்றவே

ஊ வலி கூட்டி மனத்தை

நோ எனை வருடி நின்றது

பூ வீச நின்ற தடமென்

கூ நின் பின்னே சென்றது



**06**

# விடியல்

## பா .காயத்ரி

பூ மாரி பொழிய வையம்

பை யென காட்சி அளிக்க

தூ இசை பாடிட ஆதவன்

கை யினை பற்றி விடிகவே...!

ஓ வழி ஓடிய நீரலை

கூ ரேகை கீழாய் புதைந்து

தே யென அருளி உழவன்

மே யிணை அடைய விடிகவே...!

தூ ஆன சொல்லை மொழிந்து

நே பால் மகிழ வாழ்ந்து

அ திசை ஒளிர கருணை

கூ யென பொழுதே விடிகவே...!

பை யென உலகு செழிக்க

மா காடு பறவை காத்திட

கூ யின் வளம் பெருகிட

நோ யிலா உலகே விடிகவே...!



# 07

# இதிலென்னஇருக்கிறது?

## ஆ.முருகேசுவரி

இதிலென்ன இருக்கிறது

குற்றமில்லை என்று

சுற்றம் கூறினாலும்

இதிலென்ன இருக்கிறது

என்பதில் இது இருக்கிறதல்லவா..

இது எதுவாக இருந்தாலும்

இது அதுவாகவே தோன்றுமல்லவா

பிறகெப்படி இதிலென்ன இருக்கிறது

என்று நாம் விட்டுச்செல்ல முடியும்..

அப்படி இதிலென்ன இருக்கிறது

என்று நாம் விட்டுச்செல்வோமானால்

அவர் நம் செல்லமாக

செல்வமாகல்லவா

இருக்க வேண்டும்..

செல்லாக்காசாய் நினைப்பவரிடம்

இதிலென்ன இருக்கிறது

என்று விட்டு செல்வோமா..?

இதிலென்ன இருக்கிறது

குற்றமில்லை...



**08**

# காக்கைகள் கலைத்த கனவுகள்

## அ. கௌரிசங்கர்

காலங்கார்த்தாலே காக்கைகள் வந்து விடும்

காகா என்று கத்தி கனவுகளை கலைத்துவிடும்

பல மாதங்களாக பழகிய பழக்கங்கள்

தேவை அவைகளின் வயிற்றிற்கு உணவு

தெரியாமல் தந்து விட்டேன் ஒரு

தினம்

ஓதுவார் கடை ஓமப்பொடியை

இப்பொழுது சோற்றையும் மறந்து

போயின

சுவையுள்ள இட்டலியையும் மறந்து

போயின

சூழ்ந்து கொண்டு வந்து விடும்

சன்னலின் விளிம்பில்

சோகத்தை சொந்தமாக்கிய

முகங்களுடன்

கண்ணாமூச்சி காட்டிய

கொரானாவினால்

கடைகள் காணாமல் போக

கடைசியில் கருணையால் கிட்டியது

கடையொன்றில் கால் கிலோ

ஓமப்பொடி

கைப்பிடியளவு கதவின் இடுக்குகளில்

வைக்கவும்

காகா என்று கரையத் தொடங்கிய

காக்கைகள்

கணநேரத்தில் கதம் செய்யத்

தொடங்கின

கடை வழி வந்த கால் கிலோவையும்

கண் விழிகளில் காட்டின கடலளவு

நன்றியை



**09**

# வியப்பான கருந்துளை

## ஆ.முருகேசுவரி

வியப்பான கருந்துளையின்

உள் நோக்கிய ஈர்ப்பு விசை

உள்ளமோ ஈர்க்கப்பட்டு

சுருங்கத் தொடங்கியது

ஈர்ப்பெல்லைக்குள் சென்ற

எதுவும் தப்ப முடியாததாய்

ஆசையின் பெருந்துளை

வியப்பூட்டுவதாகவே

நெருங்கியஅத்தனை

ஒளியையும் அணைக்கிறது

நடப்பதறியா திகைக்கிறது

சுற்றிக்கிடப்பதும் சுற்றுவதும்



# 10

# மாற்றம் என்பதே மாறாதது

**ஆ.முருகேசுவரி**

வேதனைகளும்

சோதனைகளும்

வேடிக்கைக்

காட்டிக்கொண்டே - நீ

வலுவிழந்துவிடாதே...!

உரங்கூட்டும்

உறவுகள் யாரும்

உன்னருகே

இல்லையென்று - நீ

உழன்றுவிடாதே...!

இன்னல்களை

இல்லையென்றாக்கும்

இதமானநினைவுகளை

அசைப்போட்டிட -நீ

மறந்துவிடாதே ...!

கண்கோடாது

ஒருகோடாய்ப்

பார்ப்போரின்

மனக்கோடெண்ணி -நீ

மடிந்துவிடாதே...!

மாற்றம் என்பதே

மாறாதது -நாம்

மாறும் உலகின்

புதுப் பூவாவோம் -நீ

கவலைக்கொள்ளாதே...!

**11**

# அன்பு

## பொற்கொடி

கருணை..

காதல்.

கர்வம்.

மோகம்..

கோவம்..

ஆணவம்..

கவிதைகள்..

எண்ணங்கள்..

ரசனை...

பூக்கள்...

வண்ணங்கள்...

இயற்கை...

அனைத்தும் அழகானது உன்னாலே....



**12**

# அல்பகல் என்ற சொல்லுடல்

## செல்வபிரகாஷ்

அல் பகல் என்ற

சொல்லுடல்களின் குழந்தை

மாறுதல்.

ஒவ்வொரு சுழலிலும்

வட்டத்தை சதுரமாகவும்

சதுரத்தை செவ்வகமாகவும் மாற்றி.

யுக யுகமாக விளையாடுகிறது

அந்தக் குழந்தை.

எந்த வடிவிற்கும்

முடிவை எழுதி, எழுதி

தன் அகவையை கூடாது

நிறுத்தி வைத்துக் கொள்கிறது.

மாறுதல்களின் ஒவ்வொரு

படிவமும் குழந்தைகளுக்கானது.

ஏனென்றால்

கற்றுக் கொள்வதில் குழந்தையானால்

தான்

அப்படிவத்தை நிரப்ப முடியும்.



**13**

# நிலா

## நந்தினிஸ்ரீதரன்

நீ ஒரு பிரகாசமான வெளிச்சம்

உன்னை பார்க்கும் பொழுது

சிலருக்கு நீ தாயாகவும்

சிலருக்கு நீ தந்தையாகவும்

சிலருக்கு குழந்தை முகமாகவும்

இருக்கிறாய் !

நீ பலரின் தனிமைக்கு உற்ற நண்பன்!

பலரின் அமைதிக்கு உன்னத அர்த்தம் !

பலரின் துன்பத்தை போக்கும் மாயம் நீ !

பலரின் மகிழ்ச்சிக்கு நீ ஒரு அற்புத

சாட்சி !

குழந்தைக்கோ நீ பசியை தூண்டும் தாய்

மொத்தத்தில் இறை



**14**

# விட்டத்தில் நீ வட்டம்

**ஆ.முருகேசுவரி**

விட்டத்தில் நீ வட்ட

நிலவாய் ஒளிவீசினாய்

நின்னொளி என்னுள்

மின்சாரம் பாய்ச்சியது

நாளத்தில் பாய்ந்த

உதிரத்தை உருக்கியது

இதயம் மட்டுமேனோ

இரட்டித்து ஒலித்தது

சிறகுகள் இருந்தால்

விண்ணில் உன்னோடு..!



15

# வேள்பாரி

## பொற்கொடி

என்ன சொல்வேன் நிலையை.

கத்தியின்றி யுத்தமின்றி.

என்னுள் எவ்விதம் நுழைந்தாய்.

உன் வீரத்திலா !கருணையிலா !

இயற்கையில் கலந்து கருணை.

காதல் வீரம் மதியுகம் உன் அன்பு.

அனைத்திலும் வானென உயர்ந்து.

இருக்கும் பேரண்டமே..

ஆண்டுகள் இருபத்து முன்பே.

ஒருவன் குதிரையுடன்.

தூங்க விடாமல் ஓடிக்கொண்டே.

இருந்தான் கனவில் அவனையன்றி..

வேறெவரும் என்னுள்

வரமுடியாதென்றே

இறுமாத்திருந்தேன். என் கர்வம்..

உடைந்தது. ஒரு பாதி உனையறிந்த.

நேரம் இதற்கே பித்தாகிவிட்டேனே..

முடிவில் உயிர் பிழைப்பேனோ !!

அன்றி உன் நினைவுடன் கலக்க.

காடறிய தேக்கனை தேடுவேனோ !

இல்லை நீயே போதுமெனக்கு.

ஆசானாய் என்னை வழி நடத்த..

---:::     :::---

# 16

# அகவோசை

## கலந்தர்சேக்

அலையோசை பெரிதல்ல-உன்

அகவோசையை விட

விண்மீண்கள்-உன்

விரல் நுனிகளில்.

கருங்கூந்தலில்

கட்டுவிரியன்

கடிக்காமலே விஷம் ஏறுகிறது.

பத்மத்தின் படரும் இதழ்கள்-உன்

பவ்ய சிரிப்பினாலே.

அடைமழை அழுகிறது

அன்பானவளின்

அறிமுகம் வாய்க்காதென.

உடையும் இடையும்

உன்னத படைப்பே

உறித்து தொங்கும்

கறிக்கோழியாய்

தொங்கி கிடக்கிறது

---:::      :::---

# 17

# நிறமின்றி நிழல்

## ஆ.முருகேசுவரி

நிழலுக்கு நிறங்கொடுக்க

நீலவானம் வளைத்திட்டேன்

முகிலுக்கேனோ முரண்பாடு

முட்டித்தள்ளியது கரத்தினை

கானகத்தினுள் கலங்காது

அல்அடர்ந்த அணிநிழலுள்

பதுக்கிவைத்த வாசமுள்ள

வண்ணங்கேட்டு வணங்கி

வாதாடியும் வனமகளவளோ

இறங்காததால் வாசகமற்று

கரைநின்றெனை மோதிச்

சென்றலையை அள்ளியே

எடுத்தேன் கரம்நழுவிபுறஞ்

சென்றது முத்துச்சிரிப்பால்

எனை எள்ளிநகைத்தபடியே

வீசியதென்றல் நயனத்தின்

கவனத்தைக் கலைத்தது

கையில் துகிலிகையோடு

அலைகரைத்துச் சென்ற

கரையில் நிறமின்றிநிழல்…!

---:::     :::---

**18**

# வினோத உயிரினம்

## கலந்தர் சேக்

எதுவும் மிஞ்சாத

சொற்ப வாழ்வில்

எத்தனை ஆணவம்.

எழுதுகோல் பிடித்தாலும்

ஏர்முனை பிடித்தாலும்

வித்யாசம் இல்லாத

வினோத உயிரினம் நான்.

யாருக்கோ எமன்

வார்த்தைகளால்

வஞ்சனை நெஞ்சில்

வார்த்தையோ

மலைத்தேன்.

வாரி வழங்கும்

இயற்கை அன்னை

வார்த்தெடுத்து போகிறாள்

பாவம் மாட்டிக் கொள்கிறார்கள்

அப்பாவி மாந்தர்களும் உடனே.

வயது மீறிய பேச்சுகள்

வயதை தாண்டிய நடத்தைகள்

ஐம்புலன்களும் ஆட்டம் கண்டாலும்

வஞ்சனைகள் மனதில் கொண்டாலும்

முகபாவனையோ அப்பாவி தான்

எத்தனை நாடகம் எத்தனை

வேசம்

வேசதாரியாய் ஆகுவதானால்

உண்மை முகம் தான்

உலகறியுமா

உற்ற நண்பரும்

உடன் அறிவாரோ.



**19**

# வண்ணத்துப்பூச்சியே

## ஆ.முருகேசுவரி

வாசமுள்ள மலரின்புது

நேசமெடுத்து பட்டுமேனியால்

பரந்தஉலகை ஆள்பவளே..!!

நின்றகால் சுவைஉணர

இதழூறிய அமுதம்பருக

இன்பமாய் சிறகடித்தவளே..!!

சூழலின் சூட்சுமத்தை

உறங்காநின் விழிகள்

உடனே உணர்த்தியதோ..!!

நிழல்கண்ட நிமிடத்தில்

நிலவைமுட்டும் அழுத்தம்

நின்சிறகடித்த வேளையில்..!!

கண்ணாடி விசிறியில்

காவியமாய் ஓவியம்

காணக்கண் போதுமோ..?

படபடவென்று பதறியடிக்க

பரிகாசித்ததோ என்சுவாசம்

பார்த்தமனம் பறக்கிறதே..!

நீஉதிர்த்த வண்ணமோ

என்உள் அழைக்கிறது

புன்னகை பூவிறைக்க..!!

---:::     :::---

# 20

# கடலலை

## பொற்கொடி

பாதம் தொடும்

உன் பரிசத்தில்

என் உச்சிவரை

உணர்ச்சிப் பிரவாகம்..

எனை மொத்தமாய்

உன்னுள் இழுத்துக்கொள்ள

முயலும் உன் மாயவலையில்

சிக்காமல் எட்டியே

ஓடிடும் எனை

உனக்கது சாத்தியமா !

முடிந்தால் முயலேன்

என ஆணவம் கூச்சலிட்டது

விண்ணை முட்டும் உன் ஓங்கார

சத்தத்தில் மிரளாமல் வேறென்ன

செய்ய . உன் பரிசத்தில்

பித்தாகி நிக்கிறேன்..

மீண்டும் மீண்டும்.

வேண்டியே கிறங்கியே

திரிகிறேன் உன்னிடமே !

---:::     :::---

21

# நல்லநேரம்

## கலந்தர்சேக்

எந்தன் மானிடா

உதிரம் வழிந்து உயிரலைகையில்

உத்தம நேரம் உனக்கெதற்கு

விழியில் வடியும் கண்ணீர் துடைக்க

நல் மனம் போதாதா உனக்கு

நன்மை கொண்ட

நல் உளத்திற்கு

எந்நேரமும் நல் நேரமே

வலியில் துடிக்கும்

கர்ப்பிணி பெண்ணை

நல் நேரம் பார்த்து

பிரசுவிக்க செய்வது நியாயமா

படுக்கையறையிலும் நேரம் பார்த்தாய்

பகலவனா பிறக்க போகிறான்

உனக்கு

உன்னை போன்ற மானிடன் தானே

நல்ல நேரம் கெட்ட நேரம்

வகுத்த இறைவன் எந்நேரத்தில்

பிறந்தான்

இன்பமும் இடஞ்சல்களும் மாறி மாறி

வருகிறதே

இல்லை வகுத்தது யார்தானோ

---:::     :::---

**22**

# சிலந்தியும்வலையும்

## ஆனந்திஜீவா

உனதுழைப்பு நானறியேன்...

பார்வை பட்ட மாத்திரத்தில்

துடைப்பம் துடைத்துவிடும் -உன்னை

வாழ்ந்திடிந்த வீட்டின் ரகசியமாய்..

ஊஞ்சலாடுகிறதுனது வீடு

மர்மம் சொல்லும் உனது வீட்டில்

உன்னையல்லால்

எவரேனும் வந்தால் - எமனுக்கே

உனது வலையில் உன்னைக் கண்டு,

பயந்தழுகும் என் பிள்ளைக்காக...

உன்னை அனுப்பும் பாவியாக நான் ...

நீ திரையில் வந்தாயோ!

அன்று முதல் நீயே கதாநாயகன்...

உன்னை அடித்தால் என்னை அடிக்கும்

என் பிள்ளை...

என்ன செய்ய உன்னை அடித்தே

பழக்கப்பட்ட நான் - இன்றும்

பிள்ளைக்கு தெரியாமல்...



23

# நினைவுகள்

## ஆ.முருகேசுவரி

பிடரிமயிர்க் கூச்செரிவதை

எட்டிப்பார்க்க எண்ணிய

விழிகளோ மனதினுள்ளே

கிடந்துறங்கிய கதம்பத்தின்

பிண்ணியநூலை இழுத்ததுவே...!!

பின்னங்கால் நினைவுகளை

முன்னங்கால் இழுத்துவர

காலிரண்டும் களமாறாது

கால்நின்ற தடங்களை

கதிரொளியில் காண்பித்ததுவே...!!

பூமகளின் மடியினிலே

பூபாளம் கேட்கையிலே

பூத்தமலரொன்றோ இதழ்

பூவாசம் வீசியநாளின்

பூங்கனவை உதிர்த்ததுவே…!!



# 24

# நீசத்தம்செய்

## ஆனந்திஜீவா

நீ சத்தம் செய்

உன்னை ஏனோ பிடிக்கவில்லை

சாளரத்தோரமே நீ

நானும் எத்தனை காலமாக

சாளரத்தின் காற்றை அனுபவிக்காமல்

உன் சத்தமூட்டும் எரிச்சலில்

உன் சலிப்பை உணரவில்லை

உன் இயற்கை உபாதை , என்முகம்

சுளிக்கிறது - சாளரம் தாண்டியும்

வீசும் துர்நாற்றம்- உன் உடல்

நாறிப்போக என் மூளை யோசிகிறது

உன்னை விலைக்கு வாங்கியவன்

உன் நடக்கும் சுதந்திரத்தையும்

வாங்கினான் போலும் -எந்நேரமும்

மச்சின் கீழே கிடக்கும் நீயும் பாவம்தான்

நீ அமைதியானால் உன்னை சொந்தம்

கொண்டாடியவனின் குரல் கேட்கிறது.

உணவும் அங்கே, உறக்கமும் அங்கே

சகலமும் அங்கே

சகித்துக்கொண்டு நான் இங்கே

நீ சத்தம் செய்



**25**

# இலை

## ஆ.முருகேசுவரி

கிளைசறுக்கி கீழே விழுந்தாலும்

சருகாக மண்ணுக்கு உரமாகவே ...!!

தென்றல்வந்து உரசியதும் சிலிர்த்தாய்

தூவானம் தூரியதும்

அசையாமலேயே...!!

புயலோப் புரட்டியது பூவோடு

உன்னைப் பறித்துக் கொன்றது...!!

மழை மேனிநனைத்ததும் துளிர்த்தாய்

குளிர்ந்த நினைவை நிறுத்திவைக்க...!!

கதிரின் அனலெடுத்து

கரியமிலவாயோடு

சமைத்து உண்டு பெருமூச்சுவிட்டாயே

வழிப்போக்கனும் வாழ்ந்து போகட்டும்

உயிர்மூச்சோடு என்று

எண்ணினாயோ…!!

நாடியவர்களுக்கு கூடிநின்று

குடைபிடித்து

நிழல்தந்தாய் விரல்களில்

விரிந்தநிலையில்…!!

பருவமாற்றம் பறித்து உதிரச்செய்தது

கிளையோடு ஒட்டிக்கிடந்த உன்னை…!!

பிழைத்துக்கிடந்தால் உண்டுகளைத்து

உயிர்

மூச்சுதருவாய் மடிந்தால்

உரமாய்விழுவாய் ...!



**26**

# கொஞ்சம் பாருங்களேன்

**ஆ.முருகேசுவரி**

கொட்டிகிடந்த வண்ண

வண்ண நூலெடுத்து

வீற்றிருந்த தறியிலிட்டு

பாவின்ஊடே பார்த்துப்

பார்த்துப் பிணைந்து

நெறியோடிட்ட தறியை

தளராது தினமோட்டி

அறுந்தநூல் கச்சிதமாய்

பிணைத்து அணிசேர்க்க

ஆங்காங்கே கைகோர்த்தன

ஏற்றவண்ணத்தில் எண்ணிய

திண்ணத்தில் நூலிழைகள்

வடிவெடுத்தது படைத்தவன்

பாவுத்திறனோடு நெய்தவனோ

நைந்தநிலையில் தறியோடு

தறியில்விளைந்த நூலுக்கு

வீதியில்விலை அற்றதால்

வீழ்ந்தவனோ ஏற்றிவிடும்

கரம்நோக்கி தன்சிரம்தூக்கி

உற்றுநோக்கிய நிலையில்

உலகோ சற்றும்நில்லாத

ஓடிக்கொண்டிருக்கிறது

இயந்திரப்பொறியில் தன்

நூலிழை நேரத்தைக்கூட

அகநூல்பாரா முகநூலில் ...!



# 27

# சின்னக்கண்ணன்

## பொற்கொடி

மடைமாற்றுகிறான்.

என் மனதின் நிலையறிந்து.

வியக்கிறேன் என்னுள்.

எப்படி அறிகிறான்.

குறும்பன் வார்த்தைகளில்.

வித்தகன் என் சிரிப்பில்.

மகிழும் என் தந்தையோ.

தாயோ இல்லையவன்..

விழிகள் கருதிராட்சையென

உருளும் சிரிப்பில்.

சிலையென ஆகிறேன்......



28

# நீள்கின்றபாதையில் பொற்கொடி.

அனுபவங்களேனும் நிழல்கள்.

வந்து போகும் பருவ நிலைகள்.

அதில் தோன்றும் வண்ணங்கள்.

சுவையான பழங்களும் உண்டு..

கசந்துப் போன கனிகளும்..

பாதையறியா பயணத்தை விட.

அறிந்தே நீளும் பயணங்களில் !

இளைப்பாற இருக்கை வேண்டாம்..

சென்று கொண்டே இரு உன் இலக்கை

நோக்கி....

29

# நிராயுதபாணி

## ஆனந்தி ஜீவா

உன் புன்னகை இங்கு பலரிடமில்லை

நீக்கமற நிறைந்திருக்கும் நீ

உனக்காகவே செய்கிறோம்

வாழவும், சாகவும்

நீ இருந்தாலும் இல்லாவிடினும் பயமே

நீ இருந்தாலும் இல்லாவிடினும்

மகிழ்ச்சியே

நீ இருந்தாலும் இல்லாவிடினும்

துன்பமே

நீ இருந்தாலும் இல்லாவிடினும்

ஆச்சரியமே

நீ இருந்தாலும் இல்லாவிடினும்

பொறாமையே

நீ இருப்பதென்னமோ

சலைவைத்தாளில் தான்

கொண்ட கொள்கையை மறக்க

வைக்கும் தாளில்

அதில் மட்டுமாவது நீ உள்ளாயே



30

# தமிழ்மொழி

பா.காயத்ரி

அமிழ்தின் சுவையறிய

அன்னை மொழியின்

அனுபமம் ழகரத்தை

அருந்தினால் அறியலாம்...!

ஆழி புகுந்து

ஆராய்ந்து அறிந்தால்

ஆதாரமாய் கிடைப்பதும்

ஆதி தமிழே...!

இலக்கணச் செறிவுடன்

இயற்கையோடு ஒருங்கிணைந்த

இன்றியமையா மொழியாக

இன்றளவும் திகழும்தாயே...!

ஈணவள் தன்மையாய்

ஈகையின் பண்பாய்

ஈர் குறையாத

ஈர்ப்பின் விசையே...!

உயிர் அசைக்கும்

உயிர்வளியாய் நிறைந்த

உலக மொழியே

உன்னத தமிழ்த்தாயே...!



**31**

# தேடிக்கொண்டே இருக்கிறேன்

## சுதா கிருஷ்ணமூர்த்தி

தேடிக்கொண்டே இருக்கிறேன்..

தெரிந்தால் சொல்லுங்களேன்...

சாலைகளின் சந்திப்புகளிலும்,

மகிழ்வுந்து நிறுத்தங்களிலும்,

சிறுகுறு தெருக்களிலும்,

பெருங்கடை வீதிகளிலும்,

ஊமையான நெடுஞ்சாலைகளிலும்,

சலசலப்பு கூடிய சந்தைபாதைகளிலும்,

ஒரு அந்தி மயங்கும்பொழுதினில்,

அலுவல் முடிந்த வேளையில், நாற்கர

சிக்னல் நிறுத்தத்தில், என் அருகில்

வந்து நின்றது அது..அதன் கண்ணாடி

உடலில் எனைக் கண்டநாள் முதல்

..அதை (தேடி)

வணிகம் மிகுந்த கல்யாண சந்தையில்,

விலை போகாமல் வேலைக்கு போகும்,

முப்பதின் விளிம்பில் முதிர்கன்னியாக

நிற்கும் என்னை..மூவுலக பேரழகியாக

காட்டிய அந்த பேருந்தினை

தேடிக்கொண்டே இருக்கிறேன்..

தெரிந்தால் சொல்லுங்களேன்...



32

# அடம்

## ஆனந்தி ஜீவா

பிடித்திருக்கிறதா இராணி

கருப்பாக இருக்கிறான்- அவன்

உள்ளத்தில் போரட்டத்தி எறிந்து

கோண்டே இருக்கும்

இவனைப் படித்திருக்கிறதா இராணி

வெண்மையாக இருக்கிறான்

சாம்பல் பூத்தவன் உள்ளே

போரட்டக்கங்குள் குமுறிக்கொண்டே

இருக்கும்.

இவனைப் பிடித்திருக்கிறதா

உங்களைப் போலவே ...

எனக்கு நிகர் நான் மட்டும்தான்

நான் தான் நான்(அடம்)



**33**

# தவப்புதல்வர்கள்

## ஆ.முருகேசுவரி

தாயின் தவித்த வாய்க்குத்

தண்ணீர்கூட தரமுடியாத

தவப்புதல்வர்கள்

தந்தை அறுவை சிகிச்சைக்கு

கூட அருகே அமர முடியாத

அருமைப் புதல்வர்கள்

தோழர்களோடு திருவிழாக்

கூட்டத்தைக்

காண துடித்துக்கொண்டிருக்கும்

தூண்டில் மீன்கள்

கதிரவன் அனலை அள்ளித்

தெளித்தாலும் சந்தனமாய்

பூசிக்கொள்பவர்கள்

சிரசிலேறிய சிந்தனை கைகூடும்

வரை தன்இளங் காலத்தைக்

கரைத்து நிற்பவர்கள்

வலி துரத்திய காலங்களை

வாசலிலேயே விட்டுவிட்டுப்

புன்னகைப் பூப்பவர்கள்

எம் வெளிநாடு வாழ் மனங்கள்



**34**

# சிட்டுக்குருவி

## ஆ. முருகேசுவரி

சிட்டுக்குருவி

சிறு பாதங்கொண்டு

உலகளக்க உயரேப்

பறக்க உத்வேகம்

கொண்டெழுகிறாய்

கைப்பிடியளவே நீ

என்றாலும் சிந்தனை

உயரப் பறக்கிறதுன்

முயற்சியின் பின்னே

கடுகளவு உணவெடுத்து

கடுதியாய் சிறகடிக்குமுனை

பார்க்கையிலே கவலை

மனதைவிட்டு பறந்திடுதே

கூட்டைவிட்டு நீவருவாய்

காற்றுவெளியில் தாள்

பதிப்பாய் என்றல்லவா

காத்துக்கிடக்கிறதென்

கருவிழி சிகரமேறிய

அதிர்வலையோ அதிரச்

செய்கிறதுன்னை வழி

மறந்து  நீயோ போவதெங்கே?



# 35

# இறைவனே நீ யார்

## கலந்தர்சேக்

இறைவனே நீ யார் என

கல்லிடம் கேட்டேன்

இனம் புரியாத ஏழையின் சிரிப்பை பார்

என்றான்

இறையே நீ எங்கே என்றேன்

இங்கே பாரென இயற்கையை

காட்டினான்

அழுது புலம்பி கண்ணீர் வடித்தேன்

அருகில் வந்து துடைத்து விட்ட

மழலை தான் நான் என்றான்

இத்தனை கோடி உலகில் உனக்கு -ஏன்

எத்தனை பெயர்கள் என்றேன்

எழுத்தறிவித்தவன் நான் தானே

என்றான்

தூணில் இருப்பாயா துரும்பில்

இருப்பாயா

என்றேன்-உன் தூய

உள்ளத்தில் என்றான்

இறைவனே தன்னை இறைவனாக

காட்டிக்கொள்ள தயங்கும் இவ்வுலகில்

சில மதிகெட்ட மாந்தர்கள்

தான் என்ற மிகுதியால் தாண்டவம்

ஆடுவதேனோ.




**36**

# வெட்டும் விழி நீ எனக்கு

## கலந்தர்சேக்

வெட்டும் விழி நீ எனக்கு

கொட்டும் அமுது நான் உனக்கு

தட்டும் தென்றல் நீ எனக்கு

நகரும் புயல் நான் உனக்கு

தேடும் நிலா நீ எனக்கும்

பாடும் உலா நான் உனக்கு

சங்கத்தமிழ் நீ எனக்கு

கொஞ்சும் தமிழ் நான் உனக்கு

வருடும் வாடை நான் உனக்கு

வேகும் வெயில் நீ எனக்கு

வார்த்தையடி நான் உனக்கு

மௌனமடி நீ எனக்கு.



# 37

# ஏளனப்பார்வை

**ஆ.முருகேசுவரி**

ஏளனமாய்ப் பார்க்குமுன் விழியோ
பற்றவைக்கிறதென் உள்ளத்தீயை

விழியின் ஒளியோ இருளையிழந்து
என்னுள் இறுகச் சேர்க்கிறதேனோ?

பின்னங்கால் நினைவுகளோ பிடரி
பற்றியேறி பிடித்திழுக்கிறது எனை

கழிந்தநாட்காட்டியின் களிப்பை

கலக்கிவிடுகிறதுன் ஒளிக்கற்றை

காலாவதியான சிந்தனைகளோ

சிரசிலேறிநின்று சீர்குலைகிறது

கவனத்தைக் கலைத்துவிட்டுக்

கைக்கொட்டிச் சிரிக்கின்றது



**38**

# சன்னலோரம்

## சண்முகநாதன்

இரயில் பயணமோ

பேருந்து பயணமோ எந்நாளும்

மனம் விழையுமே சன்னலோர

இருக்கைப்பயணம்!

சன்னலோர இருக்கை கிட்டிடின்

மனதிலே பொங்கிடுமே மகிழ்ச்சியின்

ஆரவாரத்தின் பயணம்!

அதிகாலைவேளை பயணமெனில்

செந்நிற வானில் நம்முடன் தொடருமே

இளஞ்சூரியனின் இனிய

காலைப்பயணம்!

சில நொடிகளே ஆயினும் நம்முடன்

பயணித்து விண்ணிலே பறந்து கரைந்து

மறையும் வண்ணப்பறவைகளின்

பயணம்!

விர்விர்ரென்று எதிரே ஓடி வந்து

கடகடவென வேகமாய் பின்னோக்கி

ஓடிச்செல்லுமே மரங்களின் பயணம்!

அதனூடே புகுந்து வெளிவந்து

கண்ணாமூச்சி ஆட்டம் காட்டி ஆடிடுமே

கதிரொளியின் குறும்புப்பயணம்!

தூர தெரியும் குளம் குட்டைகளில்

தோன்றி மறையும் கதிரவனின்

பிம்பத்தின் துரிதப்பயணம்!

எருதுகள் முன் செல்ல ஏர் சுமந்து
செல்லும் உழவன் கண் முன்னே
தோன்றி மறையும் காட்சி ஒரு நொடி
பயணம்!
டர்டர்ரென்ற ஓசையுடன் சிறு
பூச்சிகளாய் சாலையில் செல்லும் இரு
சக்கர வாகனங்களின் பயணம்!
சர்சர்ரென்று ஒன்றை ஒன்று துரத்திச்
செல்லுமே சாலையில் வண்ண வண்ண
நான்கு சக்கர வாகனங்களின் வேகமான
பயணம்!
சன்னலில் புகுந்து முகத்தில் பட்டு
தலைமுடியை கலைத்து செல்லுமே
காலை நேர சிலுசிலுவென்ற காற்றின்
பயணம்!

அசையாத முதியோரையும் ஆட்டம்

போடவைக்கும் குழந்தையாய்

மாற்றுமே சன்னலோர இருக்கைப்

பயணம்!

மனதின் இறுக்கத்தை மறக்க வைத்து

குதூகலிக்க வைக்குமே சன்னலோர

இருக்கைப் பயணம்!

இரயில் பயணமோ

பேருந்து பயணமோ எந்நாளும் மனம்

விழையுமே சன்னலோர இருக்கைப்

பயணம்!!



39

# ஆசை

**கலந்தர்சேக்**

ஆசையடி அதிகம் எனக்கு

அல்லி இதழ்களை கவ்வி பிடிக்க

ஆசையடி அதிகம் எனக்கு

அங்கமெல்லாம் அயர்ந்து உறங்க

ஆசையடி அதிகம் எனக்கு

சேலையிலே மயிர் துடைப்பதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

தொட்டில் பிள்ளையாய்

துயிலுறும் உன்னை

தொட்டு சீண்டி-உன்

சினம் ரசிப்பதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

இடுப்பின் மடிப்பில்

இரண்டு நாள் அமர்வதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு-உன்

தலைமுடியின் மல்லிகையாய்

என்னையே அர்பணிப்பதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

உன் மாதவிடாய் நாட்களில்

மாதாவாக உன்னை அரவனைப்பதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

சிறு தவறு செய்து உன்னிடம்

கசையடி வாங்குவதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

காதணிமுதல் காலணிவரை

கடைசி மணியாய்

மன்றாடுவதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

காமம் தீர்ந்த வேளையிலும்

காதலோடு களவாடுவதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

ஆதி முதல் அந்தம் வரை

அர்த்தநாதிஸ்வரராக

ஆனந்த கூத்தாடுவதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

சத்தம் இல்லாமல் முத்தம் இடுவதற்கு

ஆசையடி அதிகம் எனக்கு

ஆடையில்லா ஆதி மனிதனாய்

உன் முன் மட்டுமே தோன்றுவதற்கு

இறுதியாக

ஆசையடி அதிகம் எனக்கு

கட்டில் முதல் கல்லறை வரை

கைகோர்த்து இருப்பதற்கும்

இறப்பதற்கும்

---::: :::---

40

# ஆழிப்பேரலை

**பொற்கொடி**

ஆழிப்பேரலையில் சிக்கியே

சுழல்கிறதென் மனது.

கடுந்தீயில் பொங்கும்

பாலென பொங்குமென்

நினைவுகளை!!

மனிதநேயம் என.

நீர்க்கொண்டெனை

அடங்கச்செய்கிறது.

சில மனிதங்கள் !.

பேரலையே உனை

வென்று நிற்பேனேயன்றி.

**41**

# அன்பின் இலக்கணம்.

**பாரதியின் கண்ணம்மா**

எங்கோ எறியும் அம்பின்

கூர்மையுடன் இரும்பென விரைத்த

தேகம். உள்ளிருக்கும் அழுத்தங்கள்

மறைக்கும் என நினைவுடன்

அவன்..

ஏலே என்னடா மோட்டு வலைய

மொறச்சு பார்த்துட்டு இருக்கே

போய் ஜோலிய பாரு என மகனின்

மனக்கவலை உணர்ந்து வெளியே

அதட்டி அனுப்பும் தாய் இல்லை !!

அவள்.....

ஏனம்மினி நீ என்ற தம்பிய

பார்க்கும் லட்சணம் இதானா

பசியாற கூட்டி செல் என

நாசூக்காய் தம்பியின் மனம்

அறியும் அக்காவும் இல்லை !!

அவள்....

தன் கையில் பலகார தட்டுடன்

அருகில் வந்தவள் முகமறிந்து

வீன்வம்பிழுத்து மனம் மாற்றும்

தங்கையும் இல்லை !!

அவள்...

விரல் பிடித்து கன்னம் தடவி

சிந்தனையில் சுருங்கிய நெற்றி

வருடி வலிகள் கடந்ததின்

அடையாள கம்பீர நரையோடிய

கூந்தல் கோதி மடி சாய்த்து

கட்டிலில் காமக்கிழத்தியாய்

உள் வலி போக்கும் அவனின்

சரிபாதியும் இல்லை !!

அவள்....

தன் எச்சில் முத்தத்தால் கன்னம்

கடித்து ஆயிரம் கதை பேசி

இலகுவாக்க அவன் அன்பின் வடிவ.

செல்ல மகளும் இல்லை !!

அவள்...

கிளம்புடா மச்சான் வெளி வேலை

என பொய்யுரைத்து மனமறிந்து

இல்லாத கதையெல்லாம் பேசி

நான் இருக்கேன்டா என தோள்

தட்டி செல்லும் நண்பனும் இல்லை !!

அவள்....

ஐந்தறிவு ஜீவனுக்கே உணருதல்

சக்தி அதிகமாம். கருவறையில்

சிலையாய் அவன் உள்ளிருக்கும்

வலி உணர்ந்து தன் வார்த்தை

எனும் கொடுக்கால் கொட்டி

விடுமோ என அஞ்சி ஓடும் வண்டு

இல்லை இல்லை சிலைக்கு

வலிக்குமோ என தன் அன்பில்

சிறு சிறு சத்தம் மீட்டி சிலையின்

வலி உணர்ந்து சுற்றி சுற்றி வரும்

அணிலே அவள்....

---::: :::---

# 42

# பாலாடை விளக்கி

**கலந்தர்சேக்**

பால் உன்னும் பெண்ணே -உன்

மேலாடையால் மேன்மை பெற்றாயே.

துளிரும் மலர்களும்

குளிர்விக்கும் தென்றலும்

குறும்பாய் சிரிக்கின்றன

உன் குழந்தைதனத்தை பார்த்து.

விண்மீன் பெரிதா இல்லை -இந்த

பெண்மீன் பெரிதா

கண்ணதாசனும் கம்பனும்

விட்டுச்சென்ற விசித்திரம் இவள்.

தேடிய பொருள் கிடைத்தால் இன்பம்

வாடிய உன் முகம் பார்த்தால் துன்பம்

தேடிவதும் வாடுவதும் தேவதையை

சார்ந்தது

இதனை பாடுவது கூட பாக்கியமே.

ஆரத்தி எடுத்து உன்னை வரவேற்கும்

கைகள்

சுவனத்தில் தங்கத்தால்

அலங்கரிக்கப்படும்

உன்னை வசைபாடும் வாய்கள்

நரகத்தில் தீக்கிறையாக்கப்படும்.

---::: :::---

# 43

# நிறம் மாறும் பச்சோந்தி

**கலந்தர் சேக்**

நிறம் மாறும் பச்சோந்தி

வேதனையால் நொந்தது

மனம் மாறும் மாந்தரை

கண்டதால்

அகமொன்று வைத்து

புறமொன்று பேசும்

அற்பர்களின் மத்தியில்

அடியேன் நான் மேன்மையே என

தன்னையே தேற்றியும் கொண்டது

---::: :::---